உ

சிவமயம்.

திருப்போரூர்

சிதம்பரசுவாமிகள் அருளிச்செய்த

# பஞ்சாதிகார விளக்க மூலம்.

---

## பாயிரம்.

### விநாயகர் துதி.

முகமதியுங் கட்கவேவுங் களவளையு முத்தரிய முகப டாத்துப், புகர்மதமா மழகளிறுங் காமலர்க்கற் பகதருவும் பொருவில் பாதத் திசழுறபன் கயநிதியுந் தோன்றுபரைப் பாற்கடலிற் சிறந்து தோன்றும், உகலருமைங் காவமுதை யுளக்குளிரப் பூரித்தே யுவகை பூப்பாம். (க)

### நடேசர் துதி.

பெருங்கருணைக் கடறதும்பித் திருவுருவந் தரித்துப்
பேசருமா சான்மறைந்த வாருயிரை யெடுத்தே
இரும்புகழ்சேர் விஞ்ஞான கலாதி மூவ
ரெனத்தொகுத்துத் தனுவாதி யீந்துமும்மா யையினில்
வருஞ்சகலர்க் கிருவினையொப் பாக்கிமல பாகம்
வருவித்துத் திருவடிக்கீழ் வைப்பான்மன் றதனு
ளருங்கருணை யைந்தொழிற்கூத் தாடுமிறை யடிக
ளகமலத் தொளிவளரக் கருதியிருத் திடுவோம். (உ)

## சிவகாமியம்மை துதி.

மலர்விரையுங் கதிரொளியு முயிருடலு மணியின்
வளர்தேசு முருசிழலு மலிபொருளோ டுரையு
நிலவுதல்போ னிட்களத்தைப் பிரியாது மருவி
நிகழ்சகளத் தப்பதிக்கு நிறைமனையாய் மன்னி
யுலகுயிர்மைந் தர்கள்பிறவிப் பசிகெடவெந் நாளு
மோவாதா னந்தவமு தூட்டியவ்வீட் டிருத்துந்
திலகநுதற் சிவகாம சுந்தரியார் பாதச்
செங்கமலந் தலைமீதிற் றிகழுறவைத் திடுவாம். (௩)

## விநாயகர் துதி.

கவுட்குழிமா மதகுதிறந் தருண்மதநீர் பாய்ச்சிக்
கருதுறுமெய் யடியருளப் புலத்தஞ்சக் கரமா
நவப்பெருவித் திட்டதனி னெழுமன்பா முளையை
நசைவிடயக் கிளிகணறுக் காதவகை காத்திங்
கவக்களைகட் டருள்ஞானப் பயிரேற்றி யென்று
மியானெனுமா ணவவேழ மணுகாது துரத்தி
யுவப்புறுமெய்ச் சிவபோகம் விளைவிக்குங் களிற்றை
யுளமவுனக் கூடத்திற் பிறிவறவைத் திடுவாம். (௪)

## சுப்பிரமணியசுவாமி துதி.

கனைகடலின் முடிமீதிற் சுடர்விடுஞா யிறுபோற்
கடிநீலக் கலபமயிற் றுரகமிசைத் தோன்றி
வனசரர்தந் தருண்மாலுங் கடவுளர்கோ னுதவு
மாதவயா னையுமிருபான் மன்னுறவெந் நாளு

நினையடியார் பவநோயிற் சாராமற் காத்து
நிறைசுகபூ ரணவாரி குறைவறவே யுதவும்
புனைமலர்நீ பத்தொடையா னூபுரமா முளரிப்
பொன்னடியென் சென்னியிலும் புந்தியிலும் வைப்பாம். (ரு)

## குரு வணக்கம்.

ஐந்தொழிலி னுலகற்றி யனுக்கிரக மொன்று
மருளுடனே கொண்டுபர திருஞான வடிவாய்
வந்தருளித் தீவகத்தாற் பறவையகப் படுத்து
மாறதுபோ லடியேனை வழியடிமை கொண்டு
சிந்தைதனிற் சிவஞானப் பேரொளியைக் காட்டித்
திரிமலவல் லிருடேர்ந்து சிற்சுகத்தே வைக்கும்
நந்திலவு நதிபுடைசூழ் முதுகிரிவாழ் குமர
நாயகனைத் தூயவுளத் தேசிகனைத் திடுவாம். (சு)

## அவையடக்கம்.

கருவிகளோ ராறுறுஞ் சடமாகுஞ் சீவன்
கருதுறுதற் செயலாயோன் றறியாதிவ் விவற்றை
மருவியந்தச் சடசித்தோ ரிரண்டிற்குந் தொழிலு
மன்னறிவுந் தன்னருளால் வருவிப்ப னிறைவன்
புரையறவா கையினாலிவ் விறையருள்கொண் டடியேன்
புகல்குவன்பஞ் சதிகார விளக்கமென்றிந் நூலைப்
பரவுரவோர் கொள்ளுவரெள் ளாரிதுவு மிறைவன்
பணியெனவே யெச்செயலும் பான்செயலென் றுணலால். (எ)

## நூல்.

---

திருவளரு மொருவனொரு தொழில்புரியி னதுதான்
நிகழ்தருதன் பயனயலார் பயனவமாம் பயனுங்
கருதிவரு மவையுட்டன் பயன்மும்மைத் தாகுங்
கழறுமிடத் திடரகலல் சுகமுறுதல் புகழை
மருவுதலாய் வருமயலார் பயனருளைக் கருதி
வருமவமாம் பயன்விளையாட் டாகிவரு மிவையுண்
ணிருமலனாந் தொழில்புரித றன்பயனே பிறர்க
ணோர்பயனே வவப்பயனே நினையுமிடத் தெனிலே. (௮)

மலரகித னாகையினா லானந்த மயனாய்
மன்னுறலா லொப்பார்மிக் கிலியாய்மன் னுறலால்
நிலவுமிட ரகலுதலுஞ் சுகப்பேறும் புகழும்
நேர்தரவேண் டாமையினே தன்பயனன் றுரு
மிலகருள்பே ரறிவுடைய னாதலினால் விளையாட்
டெண்ணியொரு தொழில்புரியா னதனினவப் பயனன்
றுலகுயிர்மேல் வைத்திடுபே ரருளாலிங் கிறைவ
னுறுதொழில்செய் குவனிதைநீ பிறர்பயனென் றுணரே. (௯)

அருயிர்கட் கிறைதொழிலா லென்பயனிங் கென்னி
லவ்வுயிர்கட் கேரறிவுண் டவைவிடய வறிவு
சேர்வறாத் சொருபவறி வென்னவவைதேம்மைத்
தகளிருகூ றாய்மூன்றுஞ் சொல்லரிதாய் நின்றே
யேர்விடயா வாரகத் சொருபாவா ரகமென்
றிவ்விருளா லவ்வுயிர்க ளெண்ணவருந் தகையுந்

தேர்வருமவ் விறைவனையுஞ் சிறிதேனு மறியாச்
செய்திதனக் குறைதருமோர் திட்டாந்தங் கேளே. (௰)

உறுமருளன் விடத்தான்மூர்ச் சித்தயர்வுற் றிடவங்
கொருவன்மருந் தாலருள்கொண் டம்மூர்ச்சை நீக்கிச்
செறிமருளுக் கவுடதமுங் கொடுத்திதையுந் தீர்த்துத்
திகழ்சுகமுற் றிடவைக்குந் திறமதுவே போல
அறையிருளிற் செறியுயிர்கட் குடன்முதலா மாயை
யதனிடைதந் திருள்விடயா வாரகமுன் னீக்கி
மறைகுருவா லனுபவத்தாற் சொரூபாவா ரகமு
மாற்றியின்பந் தருமிறைவன் மாத்தொழிலா லறியே. (௰௧)

உயிர்களுமோர் படித்தவைமூ டாணவமோர் தன்மைத்
துறுமிறையே கன்பக்க பாதமிலி யானூற்
செயிராறுவிஞ் ஞானகலர்க் குடலாதி தந்த
செய்தியின்மற் றிருவர்க்குஞ் செய்தாலென் னென்னி
னியல்பொடுகண் களுமவைமூ டும்படலந் தானு
மிருந்திடவப் பிணிகுணகுற் றங்களைநன் கறிவோ
னயவொடுநன் மணிமருந்து சியினூல்நீக் கிமோல்
சாற்றியமூ வகையாக்கித் தணிக்குமல மிறையே. (௰௨)

இது, பஞ்சகிருத்திய மிவையென வுணர்த்துகிறது.

ஐந்தொழிலா வனவெவையென் றிடிலவைதா ஞ்சிருட்டி
யானதிதி சங்காரந் திரோபவத்தி னுடனே
வந்திலகு மனுக்கிரக மென்றுமச் சிருட்டி
மாயையினிற் றனுகரண புவனமுடன் போகந்

தந்திடலாந் தனுவென்பத் தொருநான்கொ டுற்ற
தகுநாலு யிரபேதஞ் சாற்றியவக் கரண
நந்துமுயிர்க் கரணம்வித் தியாகரண முடனே
நற்சிவமா கரணமென நண்ணுறுமிங் கிவையுள். (௰௩)

இது மேற்கூறிய காரணங்களின் செய்கைகளை வகுத்துக் கூறுகின்றது.

சிவனிடைக் கரணம்விட யாதிகளைத் தேருந்
திறமதுவாம் வித்தியாக ரணத்தின்முறை செப்பி
லோவறுபோ கந்துய்ப்பத் திரிகால மாயு
முறுபோகம் வினைகட்கி டேறவரைவ தாயும்
தாவிலுயிர்க் குக்கிரியை யறிவிச்சை யெழுப்புஞ்
சார்பாயும் விடயத்திற் றங்குகறங் கொப்ப
மேவியியக் குதலாயும் விடயந்தா னென்ன
வேறறமா றலாயும் விளங்குறுமா லென்னே. (௰௪)

இது சிவகரணத்தின் செய்கை கூறுகின்றது.

மன்னியநற் சிவகரணம் வித்தியாக ரணத்தை
மருவிடத் தும்புவன மிருநூற்றெரு டெண்மூன்
றுன்னுறுபோ கஞ்சிவிகை கவிகைபரி கரிதே
ருயர்கலையா திகள்கந்தஞ் சுவையாறு தொகுதி
தன்னுறுபல் லுருவங்கள் வனிதாதி பரிசந்
தோத்திரகீ தாதிகளா மற்றிவையுட் டனுவைப்
பன்னலுறு கரணத்தை யானெனவொன் புவனம்
பகர்போக மெனதெனவா ருயிர்கருதச் செயுமே. (௰௫)

இது உடலோடு கூடியிருக்கையில் உயிர்களிடத்து நிகழும் பஞ்சகிருத்தியம் இவையெனக் கூறுகின்றது.

சுகதுன்பந் துய்ப்பித்த றிதியாகு முயிர்க்குத்
தோற்றியவெல் லாமொடுக்கல் சொல்லுறுசங் கார
மிருசிருட்டி திதிசங்கா ரத்துழன்று மிடரை
வெறுக்காது ருசிப்பித்தல் விளம்புதிரோ பவந்தான்
பகர்பொருளைப் பகுத்தறிவித் திடுதலனுக் கிரகம்
பரம்பரனைந் தொழிலாலே யுறுசடசித் தெவைக்கு
மகளெழிலு மறிவுமுதித் திடுதலிவற்றாலே
யகிலமுமிங் கவனசையி லணுவசையு மெனுமால். (௰௬)

இது கடவுளுண்டென்ப தறிவிக்கின்றது.

அவ்விறைவ னிவ்வகையைந் தொழில்புரிவ னுனை
லவனையெவ்வா றறிவதெனி லனுமானத் தாலே
செவ்விதின்முன் னறிவித்தங் கவனடியைச் சேருந்
திகழுறுநல் விரகுமினிச் செப்புதுநீ கேட்டி
தவ்வலருஞ் சந்திரசூ ரியருடுவின் மேகஞ்
சாகரமா மலைதீக்கால் சரவசர பேத
மொவ்வலுரு துறுபஞ்ச பூதமுமற் றுளவு
முயிராலுண் டாக்குதல்கூ டாதமுறை யானும். (௰௭)

சந்திரசூ ரியருடுவெந் தரமதிலெந் நாளுந்
தத்தமுறை வழுவாது கொட்புறுத லானுங்
கந்தரம்வா ரியின்மொண்டே பொழிதருத லானுங்
கடறன்னெல் லையைமீறிக் கடவாமை யானுஞ்

செந்தழன்மா ருதமீறிச் செனியாமை யானுந்
திகழ்காலம் பலவிதமாய்ச் சேர்ந்துறுத லானு
மந்திரத்தாற் பாம்பாதி வசமாகை யானு
மன்னுயிர்பா ரம்பரைமா ருதுறைத லானும். (௰அ)

செந்நீரில் வெண்ணீர்போய்ச் சேர்ந்தொருபான் றிங்கட்
சிந்திறஞ் சிந்தாமற் பந்தமுறத் தங்க
வந்நீர்கண் மண்ணதனுற் சித்திரிகன் பதுமை
யாக்குதல்போ லொருவரும்பண் ணுதாக்கை யாகித்
தன்னீர்மை குறையாமற் றுயுதாத் திருந்து
தருகடப்பூ சனிப்பிஞ்சு தான்பருத்து வெளியின்
மன்னீர்மை குன்றாமற் கடமுடை யாமல்
வருவதுபோல் யோனிவழி வந்திடுத லானும். (௰கூ)

ஆணமுத லியாவைகளு மாண்பெணவை கூடி
லவ்வுருவ மாகியுயி ராங்குவா லானு
மூனமிலாண் பெண்கூடா துயிர்தோன்ற லானு
முரம்விதைவர்க் கப்படிதா வரமெழுத லானுந்
தீனமிலிந் தியபங்க ரங்கமதிற் பங்கர்
திகழுருவி லார்நோய ரிவைகளிலா வடிவ
ரானமிடி யினர்செல்வ ரறிஞரறி வில்லா
ரதிபாவ புண்ணியர்க ளாகியுற லானும். (௨௦)

ஒன்பதுவா யுடனொருவாயிட்டுடலி லுறைய
வுயிர்கட்குக் கூடாமை யினுமொரங்க நீங்கிற்
றன்சுயமாய் வருவிக்கக் கூடாமை யானுந்
தனுக்கடொறு மோர்காற்றுத் தங்கியுற லானு

மன்புடனுண் பிளைவேண்டிற் பெண்ணுறுத லானு
மழகியபெண் வேண்டுமிடத் தாணுறுத லானுந்
தென்பயிலாண் பெண்வேண்டிற் சிகண்டியுற லானுஞ்
சிங்கைதயிலெண் ணியவாறே சேராமை யானும். (உக)

மகவினிவேண் டாவெனவு மகவருத லானு
மகவளரப் பாலருத்த மரித்துறுத லானு
மிகைசெய்தான் றனையொருவன் வெட்டுமிடத் தொருவன்
விடுவித்தாள் கையினுனும் விளம்புறமற் றொருவன்
பகைவர்தமக் கஞ்சியொளித் துறவுமவர் கையிற்
படலானுந் தாவரங்கள் பரிந்துதமைக் காக்குந்
தகையறிவி லாதிருந்துந் தங்கியுற லானுஞ்
சாற்றியமுற் பிறபிறவி தாமறியா மையினும். (உஉ)

இம்முறையே யளவிறந்த பேதமதாய்ச் சடமு
மிலங்குபிருஞ் சுதந்தரமின் றுய்ந்கிகழ்த லானுங்
கம்மியனற் குயவன்கைக் கோளனிவர் நற்றேர்
கடபடமுண் டாக்கிடுமோர் காரணமே போலச்
செம்மைதரு மருள்கோடா திறையுயிர்கள் செய்த
தீவ்வினைநல் வினைக்கீடாச் செறிதனுவா திகடந்
தம்முறையே யளித்தழிப்ப னருடருவா னதனு
லக்கடவு ளுளனெனநீ மிக்கதிடத் தறியே. (உங)

நன்றேநீ ருரைத்தனசம் மதித்தேனுன் முகவ
ளுாதன்கா சிபன்விசுவா மித்திரனு தியர்க

னொன்றேடொன் றொவ்வாத சமயகட வுளர்க
ளூறுதொழில்செய் குவரென்ப தென்னையது கேணீ
குன்றுவோர் குடையிற்கு வலயமுழு தாள்வோன்
குரைகழல்சே விதரவன் றன் றொழில்புரிவா ரெனினுந்
தென்றாவ் வாசனதா னேயை யன்றிப் புரியாச்
செய்தியின்மெய் யிறையருளாற் செய்வரவர் தொழிலே.(உச)

இது பஞ்சகிருத்தியங்கள் பரமசிவனையன்றி வேறெருவருஞ்
செய்கின்றவரிலரேன்பது கூறுகின்றது.

இத்தவுல காளிறைவன் றனையறியா தமைச்ச
ரெண்ணுறுமற் றயலோரோர் தொழில்புரிவா ரதுபோ
லத்தவிறை தனையறியா தயன்முதலா மவர்க
ளெக்தொழில்கள் சிற்சிலசெய் யாரோவிங் கென்னில்
நத்துறுபல் லுயிர்கடமை மலத்தினைவிட் டெடுத்த
னாட்டொடங்கி வீட்டிருத்து னான்காறு மவைசெய்
பத்தவினை யறித்தருத்து மஃதல்லா லத்தப்
பண்ணவர்மா முனிவர்க்கும் பண்ணுவனெத் தொழிலே.(உரு)

இது, பரமசிவத்தின் திருவடியைச் சேரும்
உபாயங் கூறுகின்றது.

னியுயர்த்தோர் யாவர்க்கு மியாவைக்கு மேலோர்
னாயகனுண் டென்றறிவித் திடநீகைக் கொண்டா
யினியவன்றன் சிரடிசேர் விருகுமுறைத் திடுதா
மிதைமாறு திதயத்திற் பரிவாகக் கொள்வாய

முனமுறைசெ யைந்தொழில்போற் சூக்குமகா ரணத்து
    மூண்டதனைத் தெளிவதவன் றிருவடியைச் சேருந்
தனிவிரகிங் கதுவெதெனிற் சாற்றியவைந் தொழில்கள்
    சடசித்தோ ரிரண்டினிடைத் தாம்பகுப்பாய் நிகழும். (உசு)

சடமதனிற் சிருட்டிதிதி சங்கார நிகழுந்
    தகுமுயிரிற் றிரோபவத்தொ டனுக்கிரகந் தங்கும்
திடமுறுமத் திதியிரண்டாஞ் சுகதுன்ப மருத்துஞ்
    செய்தியினம் முறையாற்செய் தொழிலாறு மவையுட்
படிதருநற் சிருட்டியினிற் சுகமருத்துந் திதியிற்
    பகருமனுக் கிரகத்திற் பன்னலுறு முயிர்க்குக்
கடிதவிலின் பாந்துன்பத் திதிசங்கா ரத்திற்
    கழறுதிரோ பவமதனிற் காணுறுதுன் பாமே. (உஎ)

இது ஐந்தவஸ்தைகளிலும் முத்தொழிலுண்டென்னு
முறைமை கூறுகின்றது.

சகலமதே சிருட்டியதாங் கேவலஞ்சங் காரந்
    தருசுத்தந் திதியாகுஞ் சாக்கிரஞ்சொப் பனத்தோ
டிகல்சுழுத்தி துரியந்து ரியாதீத மிவற்று
    ளியம்புமுதற் சாக்கிரமே சிருட்டியது வாகும்
புகல்கனவு திதியாகுஞ் சுழுத்திமுதல் மூன்றும்
    போக்கிசெங் காரமதாம் பொருநனவிற் கனவிற்
பகர்சுகதுன் புண்டாகுஞ் சுழுத்திமுதன் மூன்றிற்
    படிவிடா மிவைபாண்டிற் சகடெனவே வருமால் (உஅ)

இது உட்கரணங்களிடத்தும் ஐந்தொழிலுளதென்று கூறுகின்றது.

நனவினிலைம் புலனுகரும் பொழுதைந்திந் தியத்தும்
நவின்றிடுமைந் தொழில்களும்வந் துறுமவையிங் குரைப்பின்
முனைமுனையோ ரிந்தியத்தைப் பொருந்தியதே சிருட்டி
முதிர்விடய மருந்துவதே திதியாகும் விடயந்
தனையறியுந் தனைவேறுச் சாற்றவொண்ணு தழுந்தல்
சங்கார மிதைதருசிப்பித் திடுதிரோ பவமா
விளிதினிதன் றெனவுணர்த லனுக்கிரக மாகு
மிம்முறையுட் கரணத்து மியங்குறுமைந் தொழிலே. (உக)

இது சாக்கிராவஸ்தையில் பஞ்சகிருத்திய முண்டென்னு
முறைமை கூறுகின்றது.

ஒருபொருளை நினைந்தெழுதல் சிருட்டியது தனையங்
குனிமகிழ்த றிதியதனை மறந்திடல்சங் கார
மருவியதின் மயங்குதலே திரோபவமாம் பின்னர்
மற்றதனைத் தெளிந்தறித லனுக்கிரக மாகும்
கருவிகளொவ் வொன்றி லுயிர் கலந்துறுபோ தெல்லாங்
காரணனைந் தொழிலுளமுன் கழறுமுறை காணில்
விரவுகரு வியின்மூன்று முயிரினிடத் திரண்டு
மேவுறுமைந் தொழில்களுமுன் மெய்க்குயிர்க்கோ தியல்போல்.

இது தூல சூக்கும பஞ்சகிருத்தியங்களைச் சொல்லுகின்றது.

நாலிருபத் தொருநான்கை நண்ணிலக்க விதமா
நவிலுடலிற் றொழிலிறைவன் புரிவதுதூ லமதாங்

தூலவுட லவத்தைகளிற் கருவிகளொவ் வொன்றிற்
றொழில்புரிதல் சூக்குமமா நீக்கமற நின்றே
எலுறுமிவ் வுடலுயிரோர் கருவியினிற் பிறந்து
மிருந்துமிறந் துங்கணத்திற் சுழலுமிவ் வாறளவில்
காலமவற் றுற்றிடரே கண்டதலா லந்தக்
கடவுளடி சேர்சுத்தங் கண்டதிலவ் வுயிரே. (கக)

இது பரமசிவத்தின் திருவடியைச் சேரும்படியான சுத்தநிலை இன்னதென்று உணர்த்துகின்றது.

இறைவனடி சேர்சுத்த மெங்ஙனெனி லதுதா
னியம்புருகா ரணபஞ்ச கிருத்தியத்தா லறியு
முறைமையதா மிஃதுமினி மொழிகுதுநா முன்னர்
மொழிந்தனகேட் டறிவதுபோ லறிவதுவன் றிதனை
நெறிகொள்சமா தியினிலிருந் தறிவதுவா மறிந்தா
னேர்படுநற் சுத்தமிது நிகழ்ந்துறவே விளங்கி
லறிதாலாந் திருவடியு மானந்தப் பேறு
மதனுன்முன் னுறுதுயர்க ளியாவுமகன் றிடுமே. (கஉ)

இது சமாதியிலிருந்தறியுமாறு கூறுகின்றது.

அறைந்தசமா தியினிலிருந் தறிவதெவ்வா றென்னி
லறுவகையாம் பயனின்முயற் சிகளைவிடுத் துடன்மேற்
செறிந்திடுபோ கங்களின்மேற் பற்றுகளோர் சற்றுஞ்
சேராமற் கைவிட்டோ ரேகாந்தங் கைக்கொண்
டுறைந்தவிடத் தினிலொன்றைச் சாராமற் செவ்வே
யுடல்வளையா மற்றேகக் கொன்றுசுகா தனமுற்

நிறந்திகோ லந்நிகழ்கா லம்மெதிர்கா லத்தி
லெய்துபயன் கருதாதே காக்கிரசித் தமதாய். (௩௩)

பிருதிவிதத் துவமுதலா நாதமதீ றாகப்
பேசியநா லொன்பானு ளோரொருமா கருவிக்
குருவமுடன் றரிசனசுத் தியுமிவையென் றன்னரி
யொவ்வொன்று நியதிகளைந் துயர்நாத மேறிக்
கருவிகளை யென்றாலே கண்டதனாற் சடமாங்
கண்டிவற்றைக் கழன்றவனான் காட்டியது கடவுட்
டிருவருளென் றறிந்தருளைச் செறிந்திடுதி யிதனுட்
சிவனைந்து தொழில்நடக்குஞ் செய்தியது கேளே. (௩௪)

இது தத்துவ நியதியில் பஞ்சகிருத்திய நடக்கு
முறைமையைச் சொல்லுகின்றது.

கருவிகளொவ் வொன்றாகத் தோன்றுதலே சிருட்டி
கண்டதனி னின்றுதரி சித்தல்திதி யதனை
யொருவுதலே சங்கார மருண்மீதிற் பேரன்
புற்றெழுதல் சொற்றிரோ பவமென்ன வாகுந்
திருவருளே கண்ணாகக் காண்பதனுக் கிரகந்
திருவருளிற் பிறிவறநீ தினமுமிருந் திடுபோ
தொருவினைவங் குற்றெழுதல் சகலமறைப் பாகி
யுறவதுகே வலமாமிவ் விருவகையு மொருவ. (௩௫)

இது சகல கேவலநீங்க உபாயங் கூறுகின்றது.

ஒருறுதி சொல்லுதுநீ கேட்டிநினை வெழுந்தா
லுறுநினைவின் வயமாவை யுற்றபினர்த் தெளிந்து

சீருளி னிற்பையிதி னின்றாலஞ் சினைவுன்
செங்கைவய மாமிவணஞ் செறிந்திடுமப் போது
சேருநினை வெழுந்ததனின் வயமாகு மதனைத்
திரோபவமென் றறிந்திடுதி திருவருளைச் சென்று
சார்தலனுக் கிரகமெனத் தெளிதியரு டன்னைத்
தான்வேண்டிற் சின்னாளிற் சகலமறுந் தானே. (௩௬)

இது சகலம் நீங்கினவிடத்தில் கேவல மேலிடுமென்றும் சமாதி நிலையில் நின்றால் அதுவும் நீங்குமென்றுங் கூறுகின்றது.

சகலமதிற் கேவலந்தான் வந்துவந்து தாக்குந்
தகைமைத்தா மெங்ஙனெனிற் றண்மதியை மேக
மிகலொடுவந் தடிக்கடிமூ டுதல்போல விதுமுன்
னிருஞ்சகலத் தொடுகலந்து வருந்தகைமைத் தாகும்
புகரில்சமா தியினிலுடல் கற்றூணைப் போலப்
பொற்பின்வளை யாதுற்றுப் பித்திகையிற் சாயா
திகலுறுபே ரருளாலே கண்டதனைத் தடுக்க
விசைந்திடுகே வலமுமறு மிருவகையு மறவே. (௩௭)

இது ஆணவ கன்ம மாயைகளாகிய அசுத்தம் நீங்கினவிடத்தில் சுத்தந்தோன்றுமென்னு முறைமை கூறுகின்றது.

மாயையுக்கன் மமுமந்தச் சகலத்தோ டொழியும்
வழுத்தியகே வலத்துடனா ணவமாயு மிவைதாம்
ஆயவசுத் தம்மிவைக ளகன்றதுவே சுத்த
மதனையுரைத் திடின்மலவாய்க் கதிர்வீழ்கா லம்போற்

றாயவரு ளேதயம்போற் றேன்றுமிதைப் பெரியோர்
தன்னுமிராப் பகலற்ற விடமென்று மறப்பு
மேயவினைப் பும்மில்லா விடமென்று மிறப்பு
மிருபிறப்பு மில்லாத விடமென்றும் புகல்வார். (௩௮)

இது திருவருள் நிற்கும் நிலைமை கூறுகின்றது.

சுத்தத்தைப் பெற்றதனி லுன்போதஞ் சிறிதுந்
தோன்றும னின்றிடவே தோன்றும்பே ரருடா
னெத்திக்கும் பலகோடி சூரியரோ ருழியி
னெய்திய வாறையமறும் பேரொளிய தாகித்
தித்திக்கு மமுதகட லுலகமெலாம் பரந்த
செய்தியினே சடசித்துக் குட்புறனுய் நிறைவாய்
வர்த்திக்கு நிர்வயமாய் நிட்களமாய் நிமல
வடிவாகிக் கேடில்லா வான்பொருளா யெங்கும். (௩௯)

இது தற்போதம் நீங்கவேண்டுமென்று முறைமை கூறுகின்றது.

இப்படிதோன் றியவருளி லுன்போதந் தோன்று
மெங்ஙனெனின் முனர்மாயா போதத்தைக் கொண்டே
செப்பரிய பிரவஞ்ச மறிவதுபோ லிந்தத்
திருவருட்போ தத்தாலே யவ்வருளைச் சிவத்தைத்
தப்பரிய நின்போத மெதிரிட்டே காணுந்
தற்பரனை யப்போதந் தணந்தணைய வேண்டு
மப்பொருளைப் பகுத்ததனி னிற்குநிலைக் குவமை
யலர்விழிதே சைக்கதிரைப் பிறிபடநோக் குதலே. (௪௦)

இது தற்போதம் நீங்குதற்குபாயங் கூறுகின்றது.

உன்போத மறவிரகுண் டுரைசெய்துங் கேணீ
யுறுவிழிதே சைக்கதிரைப் புடைபெயர்ந்து நோக்கா
தன்போடக் கதிரொ திரங் கசைவறநின் றிடவே
யதுவிதுவென் றிரண்டறவே தோன்றுமது போல
நின்போத மருள்சிவனா னென்றுபகுக் காது
நிகழ்சிவனோர் நின்றிட வொன் றிரண்டாகா வயிக்க
மின்போடெய் துறுமிதனைக் கண்டுகொணீ கண்டா
விதனிலெழும் பேரின்ப மேழ்கடலிற் பெரிதே. (சக

இது பேரின்பந் தோன்றுதற்கு மேற்கோள் கூறுகின்றது.

முன்னருறுங் கருவிகணற் பசுவினறி வெனவே
மொழிந்தவையு மொன்றேனுங கண்டிலனீ தென்னை
துன்னுமிரு ளுடுமதியின் சுடரிவைகள் கதிர்முன்
றோன்றுவாற் சிவத்தின்முனர்த் தோன்றுதென் றறிவா
யுன்னலருஞ் சுகமதனி லுதித்ததெவ்வா றென்னி
லுறுபெண்ணாண் கூடுமிடத் துற்றெழுமின் பேபோன்
மன்னுயிரா கியபெண்ணுஞ் சிவமென்னு மாணு
மணந்திடும்போ தெழுந்திடும்பே ரானந்த வாரி. (சஉ)

இது பரமசிவத்தின் திருவடித்தன்மை கூறுகின்றது.

திருவடிசேர் விரகெனமுன் னுரைதந்தீ ரந்தத்
திருவடியிங் கேதென்னிற் றிரோதமரு ளென்னு
மிருவகையு மிறைபாத மிவைகீழ்மே னோக்கி
யிருந்திடுங்கீழ் நோக்கியதா மெய்துறுமா ருயிர்க்கு

வருவினையொப் பாக்கிமல பரிபாக மாக்கு
மற்றதுபே ரானந்த வாரிதரு மிவைகள்
பொருவிலுயிர்ச் சிரசின்மிசைப் பிறிவறவே தங்கும்
பொற்சபையி னின்றநிலை திட்டமது காணே. (சங.)

இது திருவடிகளைச் சேர்ந்தவிடத்து நிகழும்
பஞ்சகிருத்தியங்களைக் கூறுகின்றது.

இவ்வடியைச் சேர்ந்தவிடத் தைந்தொழில்யா வென்னி
லியைதருமா யையிலுதித்தாங் கருளிலுதித் ததுவே
செவ்வியநற் சிருட்டியதாஞ் சுகப்பேறே திதியாஞ்
சிவனிருட் போதமறல் சங்கார மாகு
மவ்வியமாம் பிரவஞ்சந் தோன்றாத நிலையே
யானதிரோ பவமாகு மாயவொரு நான்குந்
தவ்வலற விளக்குதலிங் கனுக்கிரக மாகுந்
தணப்பில்சுகா தீதத்திற் கிளக்கவொண்ணா துறமே. (சச)

இது, ஆசாரியரை வியந்து கூறல்.

அளவறுநாட் பிறவியிடர்க் கடலலையிற் கிடந்த
வடியேனைத் தூக்கியும தருணடனங் காட்டி
யுளமகிழ்வுற் றறியாத வெவையுமுற வுணர்த்தி
யுயர்மவுனா னந்தத்தண் கடல்வைத்தீ ரடிகள்
களவினனா னிதற்கொருகைம் மாறறியே னுமது
கமலபத மென்னாளு மருளுடனே வாழி
வளனுறநம் மருளடியார் கடைபுகல வேண்டும்
வாரிசத் திருவாயான் மதுரநறை போலே. (சரு)

இவை அடியார்கள் பெருமை கூறுகின்றன.

புங்கமுறு மெய்ஞ்ஞானப் புதல்வாகே ளடியார்
புன்னெறியே நும்மறியார் நன்னெறியே பற்றி
யெங்குமுறுஞ் சிவமொன்றே கண்டிவெர் காணு
ரெண்ணரிய பலவிதமாய் நண்ணுறுமா யைகளைத்
தங்கியபல் லுயிர்கட்குந் தண்ணளியே புரிவார்
தாய்போற்சேய் போனுளைக் கென்றுன்னுர் சற்று
மங்கியுமுற் பவமுற்றும் வருமவர்போற் பிறரை
வருபகைவ ருறவரென வாடார்ம கிழாரே. (சசு)

ஆணவமே யாருயிர்கட் குட்பகையென் றறிவா
ரளவறுநா ளுறமூடித் துயருறவைத் ததனுற்
ருணுவெமைக் கேளாது தண்ணளியா லெடுத்துத்
தனுவாதி தந்ததனைப் பரிபாக மாக்கி
மாணுறுமின் பந்தரலா னக்கடவு டானே
மன்னுறவா மென்றறிவா ரன்னவனைத் தொழுவார்
காணுயிர்தற் சுதந்தரமாச் சுகதுன்பந் தருமோர்
காரணமின் மையினதனைப் பொதுவாகக் காண்பார். (சஎ)

ஊழ்வினையா லேபிறருக் குயர்நன்மை செயினு
மொருவர்தமக் குத்தீமை யுறுநன்மை செயினுந்
தாழவறுபே ரருளாளன் றன்செயலா நினைவார்
தம்பாலோர் தீமையுறிற் றம்மைவெறுத் திடுவார்
காழுறுநெஞ் சினர்பிறருக் கொருநன்மை செயினுங்
கருதயலார் தீதுதமக் குச்செயினுங் காண்பா

ரேழ்கடலிற் சுகதுன்ப மியாம்பிறரென் றன்னி
யிவைமாறிச் செய்யுமிடத் தீசன்மேல் வைப்பார். (௩௮)

முளையாதி சராசரமோர் முன்னிலையா லெழினு
மொழிந்தவையோர் முன்னிலையாற் காக்கப்பட் டெறினும்
வளைகடல்சூ ழுலகினிலோ ருயிர்க்கோர்முன் னிலையான்
மவினாசம் வந்துறினு நூல்பிறரான் மனத்தா
லுளைவுறுமா மயக்குறினு மவைகளினுற் றெளித
லுற்றிடினு முன்னிலையைச் சற்றெனினு முன்னோர்
தலையவிழும் பூங்கொன்றைச் சங்கரனுர் புரியுந்
தண்ணளியைத் தொழிலென்றே யெண்ணிவியந்திடுவார். ()

பருத்தியசத் தின்மயிர்மண் பாடாணு திகடாம்
பான்சிருட்டி யவனருளாற் பகர்சிவன் சிருட்டி
விரித்தபடங் கம்பளமட் கடஞ்சிகஃி கோயில்
விளம்புமிவை யாதிகளா மிவைபோல வுலக
மருத்தியுடன் விளங்குறினுஞ் சீவர்கள்போன் மயங்கா
. ருருன்விளையாட் டாகினைவ ராதலிற்புற் புதமா
வுருக்கொளினுஞ் சிருட்டிதிதி சங்கார முளவென்
றன்னிடுவார் தன்னிடுவோ ருயர்சுகவா ரியிலே. (௪௦)

காமமுறின் மோகமும்லோ பமுந்தோன்று மந்தக்
காமமறி விரண்மெறுங் காமமறு தலையி
லேமமிகுங் கோபமுறு மிதனின்மத வயிர
மெழுமதறி விவையறுமென் றிச்சைசினஞ் சாரார்

யாமறிவி னிவ்வறிவி லெழுமின்ப மெமதென்
றெண்ணிடுவார் தருவவனி யாமெமதென் றெண்ணார்
சேமமிதி யிறைவனவ னிறைவியரு ளதுதான்
சிற்சுகமென் றெண்ணிடுவார் நற்சுகபூ ரணரே. (௩௧)

இது வாழ்த்துக் கூறுகின்றது.

செய்பயத்தி லெழுமாறே நிகழ்சுகபூ ரணமாய்
நிறைந்தவடி வோர்வடிவா யெழுந்தருளி நாயேன்
பொய்யறநற் றிருநடனந் தூலமுதன் மூன்றுப்
புகன்றடியேன் றனையின்பப் புணரியிலே வைத்தீர்
செய்யதம தருளடியார் நடையுமுறைத் திட்டீர்
சிறியேன்மேல் வைத்திடுபே ரருளும்வாழி
வையமற வென்முடிமேல் வைத்ததிருச் செந்தா
மருள்வாழி யடியர்குழாம் வாழிசகம் வாழி. (௩௨)

பஞ்சாதிகாரவிளக்க முற்றியது.

